ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி: 54

# ॥ श्री श्यामलादण्डकम् ॥

# ஸ்ரீ ச்யாமலா தண்டகம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன் கூடியது



ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை–600001.

# முத்திரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யவர்யர் களான ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர்களால் பிரதிஷ்டை செய்யப் பெற்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதீச்வரர் களான ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகிறது.

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்திலிருந்து "ஸ்ரீ ஶ்யாமலா தண்டகம்" எளிய நடையாயினும் ஆழ்ந்த கருத்துக்களையுடையதாயும், பண்டிதர்களாலே யும் பரிசீலனை செய்யத் தக்கதாயும், பக்தகோடிகள் விரும்பிய பலன்களைக் கொடுப்பதுடன் அவர்கள் அபேக்ஷியாமலே பலத்தைக் கொடுக்கவல்லதாயும், (படிப்பவர்களை) ஆங்காங்கு ஆனந்த பரவசமாக்கக் கூடியதாயும், சில இடங்களில் மந்திரத்தின் உண்மை களால் தெரிந்துகொள்ள அரிதாயும், சிலவற்றில் ரஸிக உலகத்தின் மனத்தைக் கவரச் செய்வதாயும், துக்கங்களின் தொடரை விலக்குவதாயும், எங்கும் நிரந்தரமாக மனத்துக்குச் சாந்தியைத் தரவல்லதாயும் உள்ள இந்த வெளியீடு பக்த உலகமெல்லாம் தேவியின் பாதகமலத்தைச் சீக்கிரமாகவே நாடுவ தற்குத் திறந்துவைத்த ராஜமார்க்கம் போல் சிறந்து விளங்குகிறது.

பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்தவர்களான ஸ்ரீ பகவத் பாதர்களுடைய அருள்வாக்கும், வாங்மய தத்வத்தை (ஸரஸ்வதியை) ஸாக்ஷாத்கரித்த மஹாகவி ஸ்ரீ காளிதாஸருடைய சொல் மணமும் பொருந்தியதும், ஸ்ரீ ஶ்யாமலா தண்டக ஸ்தோத்திரங்கள் நிரம்பியதும், தமிழ் மொழி பெயர்ப்புடனும் தாத்பர்யத்துடன் கூடியதுமான இக் கிரந்தம், ஸம்ஸ்க்ருதம் பயின்றவர்களுக்கும், மற்றவர்களுக்கும் தேவியின் அருளால் நீண்ட காலம் பயன்படுமாறு ஆசீர்வதிக்கின்றோம்.

*யாத்ராஸ்தானம்*
*இளையாத்தகுடி*
*சுபக்ருத் ச்ராவண சுத்த ப்ரதமா* } நாராயண ஸ்ம்ருதி:



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

ஸ்ரீ காமாக்ஷ்யை நம:



ஸ்ரீ காமாக்ஷீ அம்பாள்

|| श्रीः ||

# || श्यामलादण्डकम् ||

# ஸ்ரீ ச்யாமலா தண்டகம்

माणिक्यवीणामुपलालयन्तीं
मदालसां मञ्जुलवाग्विलासाम् ।
माहेन्द्रनीलद्युतिकोमलाङ्गीं
मातङ्गकन्यां मनसा स्मरामि ॥ १ ॥

மாணிக்யவீணா முபாலலயந்தீம்
மதாலஸாம் மஞ்ஜுல வாக்விலாஸாம் |
மாஹேந்த்ர நீலத்யுதிகோமலாங்கீம்
மாதங்க கந்யாம் மநஸா ஸ்மராமி || 1 ||

மாணிக்கக் கற்கள் இழைத்த வீணையை மடியில் வைத்துக் கொஞ்சுபவளும் (அன்புடன் வாசிப்பவளும்), மதத்தால் சுறுசுறுப்பற்றவளும், இனிய சொல்லெழில் பெற்றவளும், மஹேந்திர நீலமணியினது போன்ற ஒளி வாய்ந்த மெல்லிய மேனியுடையவளுமான மாதங்க கன்யகையை மனத்தால் நினைக்கிறேன். (உறுதியுடன் தியானிக்கிறேன்)

चतुर्भुजे चन्द्रकलावतंसे
कुचोन्नते कुङ्कुमरागशोणे ।
पुण्ड्रेक्षुपाशाङ्कुशपुष्पबाण-
हस्ते नमस्ते जगदेकमातः ॥ २ ॥

சதுர்புஜே சந்த்ர கலாவதம்ஸே
குசோந்நதே குங்கும ராகஶோணே |
புண்ட்ரேக்ஷு பாஶாங்குஶ புஷ்பபாண-
ஹஸ்தே நமஸ்தே ஜகதேகமாத: || 2 ||

நான்கு கைகளுள்ளவளே! சந்த்ரகலையைச் சிரோ பூஷணமாகக் கொண்டவளே! உயர்ந்த கொங்கைகளுள்ளவளே! குங்குமப் பூச்சால் சிவந்தவளே! நாமக்கரும்பு. பாசம், அங்குசம், மலர்க்கணைகள் இவைகளைக் கரங்களிற் கொண்டவளே! உலகிற்குத் தாயே! உனக்கு வணக்கம்.

माता मरकतश्यामा मातङ्गी मदशालिनी ।
कुर्यात् कटाक्षं कल्याणी कदम्बवनवासिनी ॥ ३ ॥

மாதா மரகதஶ்யாமா மாதங்கீ மதஶாலிநீ ।
குர்யாத் கடாக்ஷம் க்ல்யாணீ கதம்பவநவாஸிநீ ॥ 3 ॥

மரகதம் போல் கரிய நிறத்தினளும், மதங்கரின் பெண்ணும், மதத்தால் விளங்குபவளும், மங்கள ரூபிணியும், கதம்ப வனத்தில் உறைபவளுமாகிய (என்) தாய் கடைக்கண்ணால் (என்னை) நோக்கி அருளுவாளாக.

जय मातङ्गतनये जय नीलोत्पलद्युते ।
जय सङ्गीतरसिके जय लीलाशुकप्रिये ॥ ४ ॥

ஜய மாதங்க தநயே ஜய நீலோத்பல த்யுதே ।
ஜய ஸங்கீத ரஸிகே ஜய லீலாஶுகப்ரியே ॥ 4 ॥

மதங்கரின் புதல்வி! வெல்க! கருநெய்தல் மலரின் காந்தி பெற்றாய்! வெல்க! இன்னிசை சுவைப்பாய்! வெல்க! (விளையாட்டுக்கான கிளியிடம்) லீலா சுகத்தினிடம் அன்பு கொண்டாய்! வெல்க!

जय जननि सुधासमुद्रान्तहृद्यन्मणिद्वीपसंरूढबिल्वाटवीमध्य-कल्पद्रुमाकल्पकादम्बकान्तारवासप्रिये, कृत्तिवासःप्रिये, सर्वलोकप्रिये!

ஜய ஜநநி, ஸுதாஸமுத்ராந்த-ஹ்ருத்யந் மணித்வீப-ஸம்ரூட-பில்வாடவீ மத்ய-கல்பத்ருமாகல்ப காதம்ப-காந்தார வாஸப்ரியே, க்ருத்திவாஸ:ப்ரியே, ஸர்வலோகப்ரியே!

அமுதக் கடலின் நடுவே மனத்தைக் கவரும் மணித் தீவில் செழித்தோங்கிய வில்வக் காட்டினூடே கல்பக மரங்களை அணியாகக் கொண்ட (கல்பக விருக்ஷங்களோடு கூடிய) கதம்ப வனத்தில் வஸிப்பதில் பிரிய முள்ளவளே! கரித்தோல் போர்த்த சிவனார் காதலியே! எல்லாப் பிராணிகளிடமும் அன்பு கொண்டவளே! தாயே! மேன்மையுடன் உறைவாயாக!

**सादरारब्धसङ्गीतसम्भावनासम्भ्रमालोलनीपस्रगाबद्धचूली - सनाथत्रिके! सानुमत्पुत्रिके!**

**ஸாதராரப்த ஸங்கீத-ஸம்பாவநா ஸம்ப்ரமாலோல-நீப-ஸ்ரகாபத்த-சூலீஸநாத த்ரிகே, ஸாநுமத் புத்ரிகே!**

அன்புடன் துவக்கப்பட்ட இன்னிசையை மதிக்கும் ஆர்வத்தினால் சிறிது அசைகின்ற கதம்பமாலை சூடிய கூந்தலுடன் கூடிய பிடரியை (கழுத்தின் பின்புறத்தை) யுடையவளே! (அல்லது, கதம்பமாலை யணிந்த பின்னலுடன் கூடிய முதுகெலும்பின் அடிப் புறத்தை யுடையாளே!) மலைமகளே!

**शेखरीभूतशीतांशुरेखामयूखावलीबद्धसुस्निग्धनीलालकश्रेणि-शृङ्गारिते लोकसम्भाविते!**

**ஶேகரீபூத - ஶீதாம்ஶுரேகா - மயூகாவலீபத்த - ஸுஸ்நிக்த-நீலாலக ஶ்ரேணி ஶ்ருங்காரிதே, லோக ஸம்பாவிதே!**

தலையணியாக அமைந்த திங்கட் பிறையின் கதிர்க் கற்றையால் மிக்க எழில் பெற்ற கரிய குழல் வரிசையால் அழகுற்றவளே! உலகோரால் மதிக்கப் பெறுபவளே! (பூஜிக்கப்படுபவளே!)

**कामलीलाधनुःसन्निभ - भ्रूलता-पुष्पसन्दोह-सन्देहकृल्लोचने, वाक्सुधासेचने!**

**காம-லீலாதநுஸ் ஸந்நிப - ப்ருலதா புஷ்ப ஸந்தோஹ-ஸந்தேஹ-க்ருல்லோசநே, வாக்ஸுதா ஸேசநே!**

மன்மதனுடைய கேளிக்கைகளுக்கான வில்லை நிகர்த்த புருவக்கொடியின் மலர்க்கொத்துத்தாளே என்று ஐயுறத்தக்க விழிகளை (கண்களை) யுடையாளே! சொல்லமுதால் (அன்பர்களை) நனைப்பவளே!

(அமுதம் போன்ற அன்புமொழிகளால் அன்பர்களுக்கு அருள் புரிபவள் என்பது கருத்து.)

**चारुगोरोचनापङ्ककेलीललामाभिरामे, सुरामे, रमे!**

**சாரு கோரோசநா பங்க-கேலீ லலாமாபிராமே, ஸுராமே, ரமே!**

அழகிய கோரோசனைச் சேற்றால் (கலவையால்) இட்ட விளையாட்டு (ரதிகேளிக்கை)ப் பொட்டால் அழகியவளே! (மனத்தை) மிகவும் களிப்புறச் செய்பவளே! லக்ஷ்மியே (செல்வத்திற்கு உறைவிடமே!)

**प्रोल्लसद्वालिकामौक्तिकश्रेणिका-चन्द्रिकामण्डलोद्भासि-गण्ड-स्थलन्यस्त-कस्तूरिकापत्र-रेखासमुद्भूत-सौरभ्यसंभ्रान्तभृङ्गाङ्गना-गीत-सान्द्रीभवन्मन्द्रतन्त्रीस्वरे, सुस्वरे, भास्वरे!**

**ப்ரோல்லஸத் வாலிகா மௌக்திக ஶ்ரேணிகா சந்த்ரிகா-மண்டலோத்பாஸி-கண்டஸ்தல ந்யஸ்த கஸ்தூரிகா பத்ர ரேகா-ஸமுத்பூத-ஸௌரப்ய ஸம்ப்ராந்த-ப்ருங்காங்கநா கீத-ஸாந்த்ரீ-பவந் மந்த்ர தந்த்ரீ-ஸ்வரே, ஸுஸ்வரே, பாஸ்வரே!**

நன்கு ஒளிரும் வாளி என்ற கர்ணாபரணத்திலுள்ள முத்து வரிசைகளின் ஒளிக்கற்றையால் தெள்ளென விளங்கும் கன்னப்புறங்களில் கஸ்தூரியால் இடப்பட்ட மகரிகா பத்திரங்களிலிருந்து (கஸ்தூரியால் இடப்பட்ட சித்திரங்களிலிருந்து) எழுந்த மணத்தில் மயங்கிய பெண் வண்டுகளின் இசையுடன் (ரீங்காரத்துடன்) சேர்ந்த யாழின் மந்த்ர ஸ்வரத்தோடு கூடியவளே! இனிய குரல் வாய்ந்தவளே! ஒளி பொருந்தியவளே!

**वल्लकीवादनप्रक्रियालोल-तालीदलाबद्ध-ताटङ्कभूषाविशेषा - न्विते, सिद्धसम्मानिते !**

**வல்லகீவாதந ப்ரக்ரியா லோல-தாலீதலாபத்த-தாடங்க-பூஷா-விசேஷாந்விதே, ஸித்த ஸம்மாநிதே !**

*யாழொலிக்குங்கால் அசையும், ஓலையாலான தாடங்கமென்ற சிறந்த கர்ணாபரணத்துடன் கூடியவளே ! ஸித்தர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவளே !*

**दिव्यहालामदोद्वेल - हेलालसच्चक्षुरान्दोलनश्री - समाक्षिप्त - कर्णैकनीलोत्पले, पूरिताशेषलोकाभिवाञ्छाफले, श्रीफले !**

**திவ்ய ஹாலாமதோத்வேல-ஹேலாலஸச் சக்ஷுராந்தோலந ஸ்ரீ-ஸமாக்ஷிப்த-கர்ணைக நீலோத்பலே, பூரிதாசேஷ-லோகாபிவாஞ்சா-பலே, ஸ்ரீபலே !**

*சிறந்த லாகிரி மதம் காரணமாக மிகுதியான விளையாட்டுக்களால் (கேளிக்கைகளால்) ஒளி வீசும் கண்களின் அசைவாலேற்படும் காந்தியால் செவிகளிலே அணிந்த சிறந்த குவளை மலர்களைப் பழிப்பவளே ! (மது மயக்கத்தால் சுழலும் விழிகளின் ஒளியழகாலே காதில் அணிந்த குவளை மலரின் அழகை வெல்பவளே ! ) எல்லா உலகத்தவருடைய விருப்பங்களையும் நிறைவேற்றுபவளே ! செல்வத்தை (அல்லது உடலழகை)ப் பயனாக அளிப்பவளே !*

**स्वेदबिन्दूल्लसत्फाल - लावण्यनिष्यन्दसन्दोहसन्देहकृन्ना - सिकामौक्तिके, सर्वविश्वात्मिके, कालिके !**

**ஸ்வேத பிந்தூல்லஸத்பால-லாவண்ய நிஷ்யந்த ஸந்தோஹ ஸந்-தேஹக்ருந்-நாஸிகா மௌக்திகே, ஸர்வ விஸ்வாத்மிகே, காலிகே !**

*வேர்வைத் துளிகளால் விளங்கும் நெற்றியினது எழிற்பொழிவின் திவலைகளோவென ஐயந்தரும்*

நாஸாபரணத்தின் முத்துக்களை யுடையவளே! எல்லா மந்த்ரங்களின் உருவினளே! கரிய மேனியளே!

मुग्धमन्दस्मितोदारवक्त्रस्फुरत्पूगताम्बूलकर्पूरखण्डोत्करे, ज्ञानमुद्राकरे, पद्मभास्वत्करे!

முக்த மந்தஸ்மிதோதார வக்த்ர-ஸ்புரத்பூக தாம்பூலகர்ப்பூர-கண்டோத்கரே, ஜ்ஞாந முத்ராகரே, ஸர்வ ஸம்பத்கரே, பத்மபாஸ்-வத்கரே!

அழகிய புன்சிரிப்பால் சிறப்புற்ற திருவாயில் விளங்கும் பச்சைக் கர்ப்பூரத்துடன் கூடிய வெற்றிலையையும் பாக்கையும் தரிக்கின்றவளே! சின்முத்திரையுடன் கூடிய கரத்தினளே! எல்லாச் செல்வங்களையும் விளைவிப்பவளே! தாமரைபோல் ஒளிரும் திருக்கரத்தினளே!

कुन्दपुष्पद्युति-स्निग्धदन्तावली-निर्मलालोलकल्लोलसम्मेलन-स्मेरशोणाधरे, चारुवीणाधरे, पक्वबिम्बाधरे ॥ १ ॥

குந்தபுஷ்ப த்யுதி-ஸ்நிக்த தந்தாவலீ-நிர்மலாலோலகல்லோல-ஸம்மேலந-ஸ்மேர ஶோணாதரே, சாரு வீணாதரே, பக்வ பிம்பாதரே! 1॥

முல்லை மலர்களைப்போல ஒளிரும் அழகிய பற்களின் மாசற்ற ஒளியலைகளின் சேர்க்கையால் அழகுற்ற சிவந்த கீழுதட்டை யுடையவளே! அழகிய வீணையைத் தாங்குபவளே! பழுத்த கோவைப்பழம் போன்ற உதட்டை யுடையவளே!

सुललितनवयौवनारम्भ-चन्द्रोदयोद्वेल-लावण्यदुग्धार्णवाविर्भवत्कम्बुबिब्बोकभृत्कन्धरे, सत्कलामन्दिरे, मन्थरे!

ஸுலலித-நவயௌவநாரம்ப-சந்த்ரோதயோத்வேல-லாவண்ய-துக்தார்ணவாவிர்பவத்கம்பு - பிப்வோக ப்ருத்கந்தரே, ஸத்கலா-மந்திரே, மந்தரே!

மிக்க அழகு வாய்ந்த புதிய வாலிபத்தின் தொடக்கமாகிற சந்திரோதயத்தால் கரைபுரண்ட அழகாகிய பாற்கடலிலிருந்து தோன்றிய முப்புரிச் சங்கின் எழிலைப் பெற்ற கழுத்தை யுடையவளே! நற் கலைகளுக்கு உறைவிடமே! மெல்லியளே!

**दिव्यरत्नप्रभाबन्धुरच्छन्नहारादिभूषा-समुद्द्योतमानानवद्यां-शुशोभे, (समुद्द्योतमानानवद्याङ्गशोभे!) शुभे!**

**திவ்யரத்நப்ரபா-பந்துரச்சந்நஹாராதிபூஷா-ஸமுத்த்யோதமாநாநவத்யாம்ஶுஶோபே! (ஸமுத்த்யோத மாநாநவத்யாங்கஶோபே!) ஶுபே!**

தெய்விகமான மணிகளின் ஒளியால் நன்கு மறைந்துள்ள முத்துமாலை முதலிய அணிகளால் ஒளிருகின்ற குற்றமற்ற உடலழகை உடையளே! நன்மை பயப்பவளே!

**रत्नकेयूररश्मिच्छटापल्लव-प्रोल्लसद्दोर्लताराजिते, योगिभिः पूजिते!**

**ரத்ந கேயூர-ரஶ்மிச்சடா பல்லவ - ப்ரோல்லஸத் தோர்லதா - ராஜிதே, யோகிபி: பூஜிதே!**

மணிகள் பொருந்திய தோள்வளைகளின் கதிர்க் கற்றையாகிய தளிர்களால் விளக்கம் பெற்ற கைகளாகும் கொடிகளால் பிரகாசிப்பவளே! யோகிகளால் அர்ச்சிக்கப்பட்டவளே!

(கைகள் கொடிபோன்றவை. தோள்வளைகளின் ஒளிகள் கைகளாகிய கொடிகளின் தளிர்கள் போன்றவை.)

**विश्वदिङ्मण्डलव्यापिमाणिक्यतेजःस्फुरत्कङ्कणालङ्कृते, विभ्रमालङ्कृते, साधकैः सत्कृते!**

**விஶ்வ திங்மண்டல வ்யாபி-மாணிக்ய தேஜ:-ஸ்புரத் கங்கணாலங்க்ருதே, விப்ரமாலங்க்ருதே, ஸாதகை: ஸத்க்ருதே!**

எல்லாத் திக்குக் கூட்டத்திலும் ஒளி பரப்பும் மாணிக்க வளையல்களால் அழகியவளே! (அழகு செய்யப்பட்டவளே!) விப்ரமத்தால் எழில் வாய்ந்தவளே! ஸாதுக்களால் அர்ச்சிக்கப்பட்டவளே!

குறிப்பு: (விப்ரமம் - நகை இடம் விட்டுப் பெயர்த் திருத்தல், அல்லது பார்ப்பவர் மயங்கும் தன்மை)

**वासरारम्भवेला - समुज्जृम्भमाणारविन्द - प्रतिद्वन्द्विपाणिद्वये, सन्ततोद्यद्दये, अद्वये!**

**வாஸராரம்பவேலா - ஸமுஜ்ஜ்ரும்பமாணாரவிந்த ப்ரதித்வந்த்வி பாணித்வயே, ஸந்ததோத்யத்தயே, அத்வயே!**

பகலின் துவக்கத்தில் மலரும் தாமரையை எதிர்க்கும் (விரோதிக்கும்) இரு கரங்களை யுடையவளே! எப்பொழுதும், எழுகின்ற கருணையுள்ளவளே! இரண்டற்றவளே! (ஏகமாயுள்ளவளே!)

**दिव्यरत्नोर्मिकादीधितिस्तोमसन्ध्यायमानाङ्गुलीपल्लवोद्यन्न - खेन्दुप्रभामण्डले, सन्नताखण्डले, चित्प्रभामण्डले, प्रोल्लसत्कुण्डले!**

**திவ்ய ரத்னோர்மிகா தீதிதிஸ்தோம-ஸந்த்யாயமாநாங்குலீ-பல்லவோத்யந் நகேந்து-ப்ரபாமண்டலே, ஸந்நதா கண்டலே, சித்ப்ரபா-மண்டலே, ப்ரோல்லஸத் குண்டலே!**

சிறந்த ரத்தின மோதிரங்களின் ஒளிக் கூட்டத்தால் சந்தியாகாலம் போன்ற தளிர்போல் சிவந்த விரல்களில் கிளம்பிய நகங்களாகிய திங்களின் ஒளி வட்டத்தோடு கூடியவளே! இந்திரனால் நன்கு வணங்கப்பட்டவளே! ஞானப்பிழம்பே! விசேஷமாய் விளங்கும் குண்டலங்களைக் கொண்டவளே!

**तारकाराजिनीकाशहारावलिस्मेरचारुस्तनाभोगभारानमन्म - ध्यवल्लीवलिच्छेदवीचीसमुल्लाससन्दर्शिताकारसौन्दर्यरत्नाकरे, वल्लकीभृत्करे, किङ्करश्रीकरे!**

**தாரகாராஜி நீகாச-ஹாராவலி ஸ்மேர-சாரு ஸ்தநாபோக-பாரா-நமந்மத்ய-வல்லீவலிச்சேத-வீசீஸமுல்லாஸ-ஸந்தர்ஶிதாகார-ஸௌந்-தர்ய-ரத்நாகரே, வல்லகீப்ருத்கரே, கிங்கர-ஶ்ரீகரே !**

*நக்ஷத்திர வரிசை போன்ற முத்தாரங்களின் தொகுதிகளால் விளங்கும் அழகிய பரந்த கொங்கைகளின் பளுவால் சிறிது வளைந்த கொடிபோன்ற இடையில் உள்ள மூன்று மடிப்புகளாகிற அலைகளின் தோற்றத்தால் தன்னுருவை வெளிப்படுத்தும் எழிலாகும் சமுத்திரத்தை உடையவளே! யாழ் தாங்கிய கையாளே! தாஸர்களுக்குச் செல்வத்தையளிப்பவளே!*

**हेमकुम्भोपमोत्तुङ्ग-वक्षोजभारावनम्रे, त्रिलोकावनम्रे !**

**ஹேமகும்போபமோத்துங்க-வக்ஷோஜ-பாராவநம்ரே, த்ரிலோ-காவநம்ரே !**

*தங்கக் குடங்களென உயர்ந்த ஸ்தனங்களின் பாரத்தால் சற்றுக் குனிந்திருப்பவளே! மூவுலகோராலும் வணங்கப்படுகிறவளே!*

**लसद्वृत्तगम्भीरनाभीसर-स्तीरशैवालशङ्काकर-श्यामरोमा-वलीभूषणे, मञ्जुसम्भाषणे !**

**லஸத்வ்ருத்தகம்பீர-நாபீஸரஸ்தீர-ஶைவாலஶங்காகர ஶ்யாம-ரோமாவலீ-பூஷணே, மஞ்ஜு ஸம்பாஷணே !**

*விளங்கும் வட்டமான ஆழ்ந்த கொப்பூழ் என்னும் குளக்கரையிலுள்ள பாசிக்கொத்தோ என்ற சந்தேகத்தை விளைவிக்கும் கரிய ரோம வரிசையை அணியாகக் கொண்டவளே! மென்மொழியினளே!*

**चारुशिञ्जत्कटीसूत्र-निर्भर्त्सितानङ्गलीलाधनुःशिञ्जिनीडम्बरे, दिव्यरत्नाम्बरे !**

சாருஸிஞ்ஜத்கடீஸூத்ர - நிர்பர்த்ஸிதாநங்கலீலாதநு:-ஶிஞ்ஜீநீடம்பரே, திவ்யரத்நாம்பரே !

*இனிது ஒலிக்கும் அரைஞாணால் மன்மதனது அழகிய வில்லின் நாணொலியின் பெருமையை அதட்டுகின்றவளே! (பழிப்பவளே) சிறந்த ரத்தினங்களமைந்த வஸ்திரமணிந்தவளே!*

**पद्मरागोल्लसन्मेखलाभास्वर – श्रोणिशोभाजितस्वर्णभूभृत्तले, चन्द्रिकाशीतले ॥ २ ॥**

பத்மராகோல்லஸந் - மேகலாபாஸ்வர-ஶ்ரோணி ஶோபா ஜிதஸ்வர்ணபூப்ருத்தலே, சந்த்ரிகாஶீதலே ! ॥ 2 ॥

*பதுமராகக் கற்களால் ஒளியுமிழும் மேகலையால் பிரகாசிக்கின்ற நிதம்பத்தால் பொன்மயமான மேருவரையின் தாழ்வரையை வென்றவளே! நிலாவெனக் குளிர்ந்தவளே!*

**विकसितनवकिंशुकाताम्रदिव्यांशुकच्छन्नचारूरुशोभापराभूत-सिन्दूरशोणायमानेन्द्रमातङ्गहस्तार्गले, वैभवानर्गले, श्यामले !**

விகஸித நவகிம்ஶுகதாம்ர-திவ்யாம்ஶுகச்சந்நசாரூரு-ஶோபாபராபூத-ஸிந்தூரஶோணாயமாநேந்த்ர-மாதங்கஹஸ்தார்கலே, வைபவாநர்கலே, ஶ்யாமலே !

*மலர்ந்த புதிய பலாச புஷ்பமெனச் சிவந்த ஓர் மெல்லிய பட்டால் மறைந்திருக்கும் அழகுற்ற துடைகளின் ஒளியால் ஸிந்தூரத்தால் சிவந்திருக்கும் ஐராவதத்தின் சிறந்த துதிக்கையை அவமதிப்பவளே! தடையற்ற பெருமையளே! சியாமளையே!*

**कोमलस्निग्धनीलोत्पलोत्पादितानङ्गतूणीरशङ्काकरोद्दामजङ्घा-लते, चारुलीलागते !**

கோமல ஸ்நிக்த-நீலோத்பலோத்பாதிதாநங்க-தூணீர-ஶங்காகரோத்தாமஜங்காலதே, சாருலீலாகதே !

*மனத்தைக் கவரும் மெல்லிய குவளைகளாலான மன்மதனது தூணியோ என்ற எண்ணத்தை யளிக்கும் சிறந்த தோற்றமுள்ள அழகிய கணைக்கால்களை யுடையவளே! அழகான விளையாட்டு நடையினளே!*

**नम्रदिक्पालसीमन्तिनी - कुन्तलस्निग्धनीलप्रभापुञ्जसञ्जात - दूर्वाङ्कुराशङ्कसारङ्गसंयोगरिङ्खन्नखेन्दूज्ज्वले, प्रोज्ज्वले, निर्मले!**

நம்ர திக்பால ஸீமந்திநீ-குந்தல ஸ்நிக்த-நீலப்ரபா-புஞ்ஜ-ஸஞ்-ஜாத தூர்வாங்குராசங்கஸாரங்க-ஸம்யோகரிங்கந் நகேந்-தூஜ்ஜ்வலே, ப்ரோஜ்ஜ்வலே, நிர்மலே!

*வணங்குகின்ற திக்பாலகர்களின் ஸ்திரீகளுடைய குழல்களின் அழகிய கரிய காந்திக் குவியலால் அறுகம் புற்களோ என எண்ணிய மானின் சேர்க்கையுடன் கூடிய நகங்களாகிற திங்கள்களால் ஜ்வலிப்பவளே! விசேஷமாய் விளங்குபவளே! மாசற்றுளே!*

**प्रह्वदेवेश-लक्ष्मीश-भूतेश-तोयेश-वागीश-कीनाश - दैत्येश-यक्षेश-वाय्वग्नि - माणिक्यसंघृष्टकोटीर - बालातपोद्दाम - लाक्षार-सारुण्यलक्ष्मीगृहीताङ्घ्रिपद्मे, सुपद्मे, उमे ॥ ३ ॥**

ப்ரஹ்வ-தேவேச - லக்ஷ்மீச-பூதேச - தோயேச - வாகீச-கீநாச - தைத்யேச - யக்ஷேச - வாய்வக்நி - மாணிக்யஸங்க்ருஷ்ட - கோடீர-பாலாதபோத்தாம - லாக்ஷா ரஸாருண்ய - லக்ஷ்மீ - க்ருஹீதாங்க்ரி-பத்மே, ஸுபத்மே, உமே ॥ 3 ॥

*வணங்கும் இந்திரன், விஷ்ணு, சிவன், வருணன், பிரமன், யமன், நிருதி, குபேரன், வாயு, அக்கினி இவர்களுடைய மாணிக்க மணிகளால் இழைக்கப் பட்ட முடிகளின் இள வெயிலை மீறிய செம்பஞ்சுக் குழம்பின் செம்மையின் காந்தியைப் பெற்ற திருவடித் தாமரைகளை யுடையவளே! சோபனம் பயக்கும் லக்ஷ்மியே! உமையே!*

**सुरुचिरनवरत्नपीठस्थिते, सुस्थिते !**

**ஸுருசிர நவரத்ந பீடஸ்திதே, ஸுஸ்திதே !**

*மிகுந்த எழில் வாய்ந்த நவரத்தினங்கள் இழைத்த பீடத்தில் இருப்பவளே! அழகாயமர்ந்தவளே!*

**रत्नपद्मासने, रत्नसिंहासने, शङ्खपद्मद्वयोपाश्रिते, विश्रुते !**

**ரத்ந பத்மாஸநே, ரத்ந ஸிம்ஹாஸநே, ஶங்கபத்ம - த்வயோபாச்ரிதே, விச்ருதே !**

*செந்தாமரையிலிருப்பவளே! ரத்தினமிழைத்த சிங்காதனத்தை யுடையவளே! சங்கநிதி பத்மநிதிகளால் ஸேவிக்கப்பட்டவளே! புகழ் பெற்றவளே!*

**तत्र विघ्नेशदुर्गावटुक्षेत्रपालैर्युते !**

**தத்ர விக்நேச-துர்கா-வடு-க்ஷேத்ரபாலைர்யுதே !**

*அங்கே விநாயகர், துர்க்காதேவி, வடுகர், க்ஷேத்ர பாலர் ஆகியவர்களுடன் கூடியவளே!*

**मत्तमातङ्गकन्यासमूहान्विते !**

**மத்த மாதங்க கந்யா ஸமூஹாந்விதே !**

*மதங்கொண்ட மாதங்க கன்னிகைகளின் கூட்டத்தோடு கூடியவளே!*

**मञ्जुलामेनकाद्यङ्गनामानिते, भैरवैरष्टभिर्वेष्टिते !**

**மஞ்ஜுலா - மேநகாத்யங்கநா மாநிதே, பைரவைரஷ்டபிர்-வேஷ்டிதே !**

*மஞ்சுளா, மேனகை முதலான அழகிய மங்கையரால் கௌரவிக்கப்பட்டவளே! பைரவர்கள் எண்மரால் சூழப்பட்டவளே!*

**देवि ! वामादिभिः शक्तिभिः सेविते !**

**தேவி ! வாமாதிபி: ஶக்திபி: ஸேவிதே !**

*வாமை முதலிய சக்திகளால் ஸேவிக்கப்பட்டவளே ! தேவியே !*

**धात्रि ! लक्ष्म्यादिशक्त्यष्टकैः संयुते !**

**தாத்ரி ! லக்ஷ்ம்யாதி ஶக்த்யஷ்டகை: ஸம்யுதே !**

*உலகைப் போஷிப்பவளே ! லக்ஷ்மி முதலான எட்டுச் சக்திகளோடும் கூடியவளே !*

**मातृकामण्डलैर्मण्डिते !**

**மாத்ருகா மண்டலைர் மண்டிதே !**

*மாத்ருகா மண்டலங்களால் அழகியவளே !*

**यक्षगन्धर्वसिद्धाङ्गनामण्डलैरर्चिते !**

**யக்ஷ கந்தர்வ ஸித்தாங்கநா மண்டலை ரர்ச்சிதே !**

*யக்ஷர், கந்தர்வர்கள், சித்தர்கள் இவர்களது மங்கையரின் கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவளே !*

**पञ्चबाणात्मिके !**

**பஞ்ச பாணாத்மிகே !**

*பஞ்சபாண (மந்திர) ஸ்வரூபிணியே !*

**पञ्चबाणेन रत्या च सम्भाविते !**

**பஞ்சபாணேந ரத்யா ச ஸம்பாவிதே !**

*மன்மதனாலும் ரதியாலும் மதிக்கப்பட்டவளே !*

प्रीतिभाजा वसन्तेन चानन्दिते।

ப்ரீதிபாஜா வஸந்தேந சாநந்திதே!

*அன்புற்ற வஸந்தனாலும் சந்தோஷப்படுத்தப் பட்டவளே!*

भक्तिभाजां परं श्रेयसे कल्पसे।

பக்திபாஜாம் பரம் ஶ்ரேயஸே கல்பஸே.

*பக்தியுள்ளவர்களுக்கு மிகவும் மேன்மையை விளைவிக்கிறாய்.*

योगिनां मानसे द्योतसे (ध्यायसे)।

யோகிநாம் மாநஸே த்யோதஸே (த்யாயஸே)।

*யோகிகளின் மனத்தில் பிரகாசிக்கின்றாய். (நினைக்கப்படுகிறாய்.)*

छन्दसामोजसा भ्राजसे।

சந்தஸா மோஜஸா ப்ராஜஸே।

*வேதங்களின் வீறு என விளங்குகிறாய்.*

गीतविद्याविनोदातितृष्णेन कृष्णेन सम्पूज्यसे।

கீதவித்யா-விநோதாதித்ருஷ்ணேந க்ருஷ்ணேந ஸம்பூஜ்யஸே।

*கீத வித்தையிலே களிப்பதில் அதிக ப்ரேமை கொண்ட கிருஷ்ணனால் நன்றாக பூஜிக்கப்படுகிறாய்.*

भक्तिमच्चेतसा वेधसा स्तूयसे।

பக்திமச் சேதஸா வேதஸா ஸ்தூயஸே।

*பிரமனால் பக்தியுள்ள மனத்துடன் துதிக்கப் படுகிறாய்.*

**विश्वहृद्येन वाद्येन विद्याधरैर्गीयसे ॥ ४ ॥**

**விஶ்வ ஹ்ருத்யேந வாத்யேந வித்யாதரைர் கீயஸே ॥ 4 ॥**

*வித்தியாதரர்களால், உலகைக் களிக்கச் செய்யும் வாத்தியங்கள் கொண்டு பாடப்படுகிறாய்!*

**श्रवणहरणदक्षिणक्वाणया वीणया किन्नरैर्गीयसे ।**

ஶ்ரவண ஹரண-தக்ஷிண க்வாணயா வீணயா கிந்நரைர் — **கீயஸே ।**

*கின்னரர்களால் செவியை அள்ளும் த்வனியுள்ள வீணைகளால் பாடப்படுகிறாய்.*

**यक्षगन्धर्वसिद्धाङ्गनामण्डलैरर्च्यसे ।**

**யக்ஷ கந்தர்வ ஸித்தாங்கநா மண்டலைரர்ச்யஸே ।**

*யக்ஷ, கந்தர்வ, ஸித்தர்களின் நங்கையர்களால் அர்ச்சிக்கப்படுகிறாய்.*

**सर्वसौभाग्यवाञ्छावतीभिर्वधूभिः सुराणां समाराध्यसे ।**

**ஸர்வ ஸௌபாக்ய - வாஞ்சாவதீபிர் வதூபிः ஸுராணாம் ஸமாராத்யஸே ।**

*எல்லாச் சுபங்களையும் அடைய விருப்பங்கொண்ட தேவஸ்திரீகளால் நன்கு திருப்தி செய்விக்கப்படுகிறாய்.*

**सर्वविद्याविशेषात्मकं चाटुगाथासमुच्चारणं कण्ठमूलोल्लसद्वर्णराजित्रयं कोमलश्यामलोदारपक्षद्वयं तुण्डशोभातिदूरीभवत्किम्शुकं तं शुकं लालयन्ती परिक्रीडसे ।**

**ஸர்வ வித்யா - விசேஷாத்மகம் சாடு காதா ஸமுச்சாரணம் கண்ட மூலோல்லஸத் வர்ண ராஜித்ரயம் கோமல ச்யாமலோதாரபக்ஷத்வயம் துண்ட சோபாதிதூரீபவத் கிம்ஶுகம் தம் ஶுகம் லாலயந்தீ பரி க்ரீடஸே ।**

எல்லாச் சிறந்த வித்யாரூபியாயும் அழகிய காதைகளை நன்கு சொல்லக்கூடியதும், கழுத்தின் அடிப் பிரதேசத்தில் மூன்று வர்ணக்கோடுகள் உள்ளதும், மிருதுவான பசுமை வாய்ந்த கம்பீரமான இரண்டு இறக்கைகளை யுடையதும், அலகின் அழகால் புரசமலரின் அழகைப் பழிப்பதுமான கிளியைக் கொஞ்சி விளையாடுகிறாய்.

पाणिपद्मद्वयेनाक्षमालामपि स्फाटिकीं ज्ञानसारात्मकं पुस्तकं चापरेणाङ्कुशं पाशमाबिभ्रती येन सञ्चिन्त्यसे चेतसा तस्य वक्त्रान्तरात्गद्यपद्यात्मिका भारती निःसरेत् ।

பாணிபத்ம த்வயே நாக்ஷமாலாமபி ஸ்பாடிகீம் ஜ்ஞாந-ஸாராத்மகம் புஸ்தகம் சாபரே ணாங்குஶம் பாஶமாபிப்ரதீ யேந ஸஞ்சிந்த்யஸே சேதஸா, தஸ்ய வக்த்ராந்தராத் கத்ய பத்யாத்மிகா பாரதீ நி:ஸரேத் ।

தாமரை போன்ற இரண்டு கைகளிலும் ஸ்படிக மணிகளாலான ஜபமாலையையும், ஞானஸார ரூபமான புத்தகத்தையும், மற்ற இரண்டு கைகளில் அங்குசத்தையும் பாசத்தையும் தரிப்பவளாக எவனால் மனத்தால் தியானிக்கப்படுகிறாயோ, அவனது முகத்திலிருந்து கத்ய, பத்ய (வசனம், செய்யுள்) ரூபமான வாக்கு வெளிக்கிளம்பும்.

येन वा यावकाभाकृतिर्भाव्यसे तस्य वश्या भवन्ति स्त्रियः पूरुषाः ।

யேந வா யாவகாபாக்ருதிர் பாவ்யஸே, தஸ்ய வஶ்யா பவந்தி ஸ்த்ரிய: பூருஷா: ।

செம்பஞ்சு நிறமுள்ள தேகமுள்ளவளாக எவனால் தியானிக்கப்படுகிறாயோ, அவனுக்குப் பெண்டிரும் ஆடவரும் வசமாகின்றனர்.

**येन वा शातकुम्भद्युतिर्भाव्यसे सोऽपि लक्ष्मीसहस्रैः परिक्रीडते ।**

**யேந வா சாதகும்ப த்யுதிர் பாவ்யஸே ஸோऽபி லக்ஷ்மீ - ஸஹஸ்ரை: பரிக்ரீடதே ।**

*பொன்னிறமுள்ளவளாக எவனால் தியானிக்கப் படுகிறாயோ அவனும் ஆயிரக்கணக்கான செல்வத் துடன் களிப்புறுவான்.*

**किं न सिध्येद् वपुः श्यामलं कोमलं चन्द्रचूडान्वितं तावकं ध्यायतः ?**

**கிம் ந ஸித்யேத் வபு: ஶ்யாமலம் கோமலம் சந்த்ர சூடாந்விதம் தாவகம் த்யாயத: ?**

*மிருதுவானதும் கரிய நிறமுள்ளதும் சந்திரகலையை முடியில் கொண்டதுமான உனது திரு மேனியைத் தியானிப்பவனுக்கு எதுதான் கைகூடாது?*

**तस्य लीलासरो वारिधिः, तस्य केलीवनं नन्दनं; तस्य भद्रासनं भूतलं, तस्य गीर्देवता किङ्करी, तस्य चाज्ञाकरी श्रीः स्वयम् ।**

**தஸ்ய லீலாஸரோ வாரிதி:, தஸ்ய கேலீவநம் நந்தநம், தஸ்ய பத்ராஸநம் பூதலம், தஸ்ய கீர்தேவதா கிங்கரீ, தஸ்ய ச ஆஜ்ஞாகரீ ஶ்ரீ: ஸ்வயம் ।**

*கடல் அவனுக்கு விளையாட்டுக்கான குளமாம்; விண்ணுலகத்திய நந்தவனம் அவனது விளையாட்டுத் தோட்டமாம்; மாநிலம் முழுவதும் அவனது அரியணையாகும்; ஸரஸ்வதி அவனுக்கு வேலைக்காரியாவாள். இலக்குமியும் தானாகவே அவனுக்குப் பணிப்பெண்ணாவாள்.*

सर्वतीर्थात्मिके! सर्वमन्त्रात्मिके! सर्वतन्त्रात्मिके! सर्व-यन्त्रात्मिके! सर्वपीठात्मिके! सर्वतत्त्वात्मिके! सर्वशक्त्यात्मिके! सर्वविद्यात्मिके! सर्वयोगात्मिके! सर्वनादात्मिके! सर्वशब्दा-त्मिके! सर्ववर्णात्मिके! सर्वविश्वात्मिके! सर्वगे! हे जगन्मातृके! पाहि मां पाहि मां पाहि मां देवि! तुभ्यं नमो देवि! तुभ्यं नमो देवि! तुभ्यं नमः ॥ ५ ॥

ஸர்வ தீர்தாத்மிகே, ஸர்வ மந்த்ராத்மிகே, ஸர்வ தந்த்ராத்மிகே, ஸர்வ யந்த்ராத்மிகே, ஸர்வ பீடாத்மிகே, ஸர்வ தத்வாத்மிகே, ஸர்வ-ஶக்த்யாத்மிகே, ஸர்வ வித்யாத்மிகே, ஸர்வ யோகாத்மிகே, ஸர்வ-நாதாத்மிகே, ஸர்வ ஶப்தாத்மிகே, ஸர்வ வர்ணாத்மிகே, ஸர்வ விஶ்வாத்மிகே, ஸர்வகே, ஹே ஜகந்மாத்ருகே, பாஹி மாம், பாஹி மாம், பாஹி மாம் தேவி! துப்யம் நமோ தேவி! துப்யம் நமோ தேவி! துப்யம் நம: ‖ 5 ‖

*ஸர்வ தீர்த்த உருவமே! ஸமஸ்த மந்திரரூபிணி! எல்லாத் தந்திரங்களின் உருவே! எல்லா யந்த்ரரூபமாக இருப்பவளே! எல்லா பீடரூபிணி! எல்லாத் தத்துவமாக இருப்பவளே! எல்லாச் சக்திகளாகவும் இருப்பவளே! ஸர்வ வித்யைகளின் உருவே! எல்லா யோகமாக இருப்பவளே! எல்லா ஒலிவுருவானவளே! எல்லாச் சொற்களாகவும் இருப்பவளே! எல்லா எழுத்துக்களின் உருவினளே! எல்லா உலகங்களாயும் விளங்குபவளே! எங்கும் நிறைந்தவளே! ஓ உலகத்தின் தாயே! என்னைக் காப்பாயாக, என்னைக் காப்பாயாக, என்னைக் காப்பாயாக; ஓ தேவியே! உனக்கு வணக்கம்.*

॥ श्यामलादण्डकं समाप्तम् ॥

ஶ்யாமலா தண்டகம் ஸமாப்தம்

ஶ்யாமலா தண்டகம் முற்றிற்று.

*லிபர்ட்டி அச்சகம், சென்னை-600 001.*

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

### சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் ஸ்ரீ ஆசார்யர்களுடைய
அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ.பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது ... ... | 0—60 |
| 2. | ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) ... ... | 0—60 |
| 3. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் ... ... | 2—50 |
| 4. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும் —ஸம்ஸ்க்ருதத்தில் ... ... | 0—60 |
| 5. | — டி —தமிழில் ச்லோகமும், நாமாவளியும் ... ... | 0—50 |
| 6. | ஸ்ரீ சிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள் —ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் ... | 1—75 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ்—ஆங்கில அனுவாதங்களும் ... ... | 1—50 |
| 8. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யர்களின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது ... | 1—75 |
| 9. | ஸ்ரீ ருத்ரம் சமகம், ஸூக்தங்கள்—ஸம்ஸ்க்ருதத்தில் ... | 1—00 |
| 10. | ஸ்ரீ ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும், தமிழில் மூலமும் அர்த்தத்துடன் ... ... | 1—50 |
| 11. | ஸ்ரீ பஜன ரத்னாகரம்—ஸம்ஸ்க்ருதம் தமிழிலும் கிட்டத்தட்ட 900 கீர்த்தனங்கள் கொண்டது. இது ஒரு பஜனைப் பொக்கிஷம் ... ... | 12-00 |
| 12. | ஸ்ரீ தேவீ புஜங்கம் ... ... | 1—00 |
| 13. | ஸ்ரீ கலிவிடம்பநம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றியது ... | 0—90 |
| 14. | ஸ்ரீ ராஜராஜேஸ்வரீ மந்த்ர மாத்ருகா ஸ்தவம் ... ... | 0—40 |
| 15. | ஸ்ரீ ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம் ... ... | 1—00 |
| 16. | ஸ்ரீ அக்னிவேச்ய ராமாயண சாரம் (சதச்லோகீ ராமாயணம்) ... | 1—00 |
| 17. | ஸ்ரீ அக்னி ஸஹஸ்ரநாமம்—சம்ஸ்க்ருதத்தில் ... ... | 1—50 |
| 18. | ஸ்ரீ காமாக்ஷி ஸுப்ரபாதம் ... ... | 0—60 |
| 19. | ஸ்ரீ மஹா கணபதி ஷோடச ஸ்துதி மாலா ... ... | 0—70 |
| 20. | ஸ்ரீ குரு க்ருபாலஹரி—ஸம்ஸ்கிருதத்தில் ... ... | 1—00 |
| 21. | ஸ்ரீ கனகதாராஸ்தவம்—அன்னபூர்ணாஷ்டகம்—ஸம்ஸ்க்ருதத்தில் ... | 0—25 |
| 22. | ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்—அர்த்தம் தமிழில் ... ... | 0—50 |
| 23. | — டி —அர்த்தம் ஆங்கிலத்தில் ... ... | 0—50 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை–600 001.